ஸ்ரீ

# யாதவகிரி மாஹாத்மியம்

ஸாஹித்ய அலங்கார, ஸாங்கிய, யோக, வேதாந்த வித்வான், ஸாங்கிய தீர்த்தம்,
ஸாஹித்ய ரத்னம், சாஸ்திர கவி ரத்னம், ஆஸ்தான மஹா வித்வான்,

## ஸ்ரீ இளையவில்லி ஜக்கு வெங்கடாசாரிய ஸ்வாமியால்,

நாரத புராணத்திலிருந்து ஸங்க்ரஹிக்கப்பட்டது.



திருநாராயணபுரம் ஸ்ரீ ஸம்பத்குமாரன்.

—: ப்ரசுரம் செய்பவர் :—

ஸாஹித்ய வேதாந்த வித்வான் ஸ்ரீ ஜக்கு ஸுதர்சனுசார்யர்,
"பக்தி விலாஸம்", மேலக்கோட்டை, (மைஸூர் ராஜ்யம்).

விலை: 38 நயே பைஸா

(ஸ்ரீ யதிராஜ ஜீயர் ஸ்வாமியின் 70-வது திருநக்ஷத்திர [illegible] லிருந்து மறு பதிப்பு.)



திருநாராயணபுரம் கோவில்.

# யாதவகிரி மாஹாத்மியம்

ஸ்ரீ இளையவில்லி ஜக்கு வெங்கடாசார்யஸ்வாமி, திருநாராயணபுரம்.

ஸ்ரீய: பதியாய், அவாப்த ஸமஸ்த காமனாய், ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் ஸர்வேச்வரனாயுள்ள ஸ்ரீமந் நாராயணன் "வைகுண்டேது பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:! ஆஸ்தே விஷ்ணு ரசிந்த்யாத்மா பக்தை: பாகவதை: ஸஹ!!" என்னும்படி ஸ்ரீவைகுண்டலோகத்திலே அனந்த, வைநதேயாதி நித்யர்களாலும், முக்தர்களாலும் ஸேவிதனாயிருந்தாலும், அண்டாந்தர்வர்த்திகளான ப்ரம்மாதிகளுக்கும் வாங்மனஸ்ஸுகளுக்கு அகோசரனாய் இருக்கிறபடியால், இந்த மனுஷ்யாதிகளும் தன்னை ஸேவித்து க்ருதார்த்தர்களாக வேண்டும் என்று, தன் பரமகிருபையாலே ராமகிருஷ்ணாதி விபவாவதாரங்களைச் செய்தாலும், "அவஜானந்தி மாம் மூடா: மானுஷீம் தனு மாச்ரிதம்" என்கிறபடியே அந்த ஸுலபன் விஷயத்திலேயும் பக்தி செய்யாதிருக்கிற நம்மை எல்லாம் வசமாக்கிக் கொள்ளுகைக்காகப் பின்னானார் வணங்கும் சோதியான அர்ச்சாவதாரத்தை ஸ்வீகரித்து, இந்த யாதவாத்ரி (மேல்கோட்டை) என்கிற திவ்ய தேசத்தில், உடையவருடைய மங்களாசாஸனத்தால் மிகவும் உகந்திருந்து, செல்வநாரணன் என்றும், திருநாரணன் என்றும் பெயர் பெற்றுப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். இதனால் திருநாராயணபுரம் என்கிற திவ்ய நாமமும் இந்த திவ்ய தேசத்திற்கு ப்ராப்தமாயிற்று.

## கதையின் ஆரம்பம்

பூர்வம் கலியுகாரம்பத்தில் வியாஸாதி மகரிஷிகள் எல்லோரும் வடபதரிக்குச் சென்று, "கலிப்ரவேசம் இல்லாத க்ஷேத்ரம் எது?" என்று நாராயண ரிஷியைக் கேட்கச் சுருக்கமாக அவராலே சொல்லப்பட்ட யாதவகிரி மாஹாத்மியத்தைக் கேட்டு, அதை விஸ்தாரமாகச் சொல்ல வேண்டு மென்று பிரார்த்தித்தார்கள். அதற்கு, நாராயண ரிஷி, "நாரதர் வருவார், அவர் அதை விஸ்தாரமாகச் சொல்லுவார்" என்று நியமித்து மறைந்து விட்டார். அப்பொழுதே அங்கு வந்த நாரதரை வ்யாஸாதிகள் கேட்டதற்கு, நாரதர் யாதவகிரி மாஹாத்மியத்தை விஸ்தரித்ததன் ஸாராம்சம் கீழ் விவரிக்கப்படுகிறது.

## நான்முகன் பிறப்பு

ஸர்வேச்வரனை எம்பெருமான் ப்ரளய காலத்தில் ஆத்மவர்க்கங்களெல்லாம் அசேதனத்தோடு ஒப்பாக இருக்கிறபடியைக் கண்டு, தன் பரமக்ருபையாலே அவற்றிற்குச் சரீர, இந்திரியங்களைக் கொடுத்து ஸ்ருஷ்டி செய்வதற்காக, முதலிலே தன் திருநாபி கமலத்திலே நான்முகனை ஸ்ருஷ்டித்து, அவனுக்குப் பிரணவம், அஷ்டாக்ஷரம் நான்கு வேதங்கள் எல்லாவற்றையும் உபதேசித்து, "இந்த பிரகாரம் பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டி செய்" என்று நியமித்தான்.

## தேவாதிகள் பிறப்பும், நான்முகன் அர்ச்சாமூர்த்தியை ஆசைப்பட்டதும்.

அந்த நான்முகன் அவற்றை எல்லாம் ஆவ்ருத்தி செய்து, அர்த்தங்களை பாவித்துக் கொண்டு, "தாதா யதாபூர்வமகல்பயத்" என்கிறபடியே பூர்வ கல்பத்தின்படி, ஸுர-நர-திர்யக்-ஸ்தாவரங்கள் என்கிற நான்கு வர்க்கங்களையும் ஸ்ருஷ்டித்துத் தான் நித்யமாக ஆராதனம் செய்வதற்கு பகவானுடைய திருவுள்ளத்தில் உகந்திருக்கும் அர்ச்சா மூர்த்தி வேண்டும் என்று த்யானஸக்தனாய்

இருக்கிற பொழுது, கர்ணாமிருதமான வாத்யங்களின் ஓசை கேட்டுக், கண் திறந்து பார்த்த ஸமயம், ஆனந்தமய திவ்ய விமானம் (திருநாரணன் விமானம்) தென்பட்டது. முன் பக்கம் வாத்யம் வாசிப்பவர்களையும், பிற்பாடு கோஷ்டிகளையும், அந்த கோஷ்டிகளைச் செவ்வனே நிற்க வைக்கும் தங்கத் தடிகளைப் பிடித்திருக்கிற மணியக்காரர்களையும், அனந்த, கருட, விஷ்வக்ஸேனர் முதலான நித்ய ஸூரிகளையும், சத்ரம், சாமரம், விசிறி முதலான உபசாரங்களை ஸமர்ப்பிக்கும் கைங்கர்ய பரரையும், பிற்பாடு ஆனந்தமய திவ்ய விமானத்தையும், அதற்கு வலது பக்கத்தில் ஸுதர்சன ஆழ்வானையும், இடது பக்கத்தில் பிராட்டியையும், நடுவில் திருநாராயணனையும் ஸேவித்தான். இப்படித்தான் நினைத்தபொழுதே தான் ஆசைப்பட்டபடி, ஸ்ரீவைகுண்டத்திலிருந்து பகவான் அர்ச்சாவதாரமாக எழுந்தருளினதைப் பார்த்து, ஆனந்த ஸாகரத்தில் மூழ்கி, பின்னர் ஸமாஹிதனாய் ஓடுவது, விழுவது, தொழுவது, நர்த்தனம் செய்வது, உத்தரீயத்தை மேலே தூக்கி எறிவது, சிரிப்பது, ஆனந்த பாஷ்பம் விடுவது, ஸ்தோத்திரம் செய்வது முதலான ஆனந்தவ்யாபாரங்களைச் செய்து கொண்டு, ஸேனை முதலியார் எழுந்தருளப்பண்ணிக் கொடுத்த அந்த திருநாராயண மூர்த்தியைத் தன் தர்ம பத்னியான ஸரஸ்வதியுடன் சேர்ந்து அநேக கல்பங்கள் வரையிலும் ஆராதித்துக் கொண்டு வந்தான்.

## திருநாரணன் ஸத்யலோகத்திலிருந்து பூலோகத்திற்கு எழுந்தருளியது

இப்படி இருக்கும் பொழுது, நான்முகனுக்கு மானஸ புத்திரனும், சிஷ்யனும் இருக்கிற ஸனத்குமாரன் இந்த ஆனந்தமய திவ்ய விமான மத்யஸ்தனான திருநாராயணனை இப்புவியில் தான் கைதொழுது வர வேண்டுமென்று நான்முகனைப் பிரார்த்தித்தான். அவன் அந்த திருநாராயணனை அந்த பகவானுடைய நியமனப்படியே எழுந்தருளப் பண்ணிக் கொடுத்தான். ஸனத்குமாரன் ஸத்ய லோகத்திலிருந்து மேருபர்வதத்திற்கும், அங்கிருந்து கைலாஸத்திற்கும், அங்கிருந்து ஹிமவத்பர்வதத்திற்கும் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்தார்; அங்கெல்லாம் தேவதைகள் முதலானவர்கள், அஞ்சலி, ப்ரார்த்தனை, தண்டனிடுகை முதலானவற்றை ஸமர்ப்பித்தார்கள். அந்த ஹிமவானில் இருக்கும் வடபதரியிலே மூன்று நாள் ஆராதனம் செய்து, அங்கிருந்து தென் திசைக்குப் புறப்பட்டுவந்து நான்முகனாலே முதலிலேயே குறிப்பிடப்பட்ட கல்யாணி தீர்த்தம் முதலாகிய அஷ்ட தீர்த்தங்கள், ஸப்த க்ஷேத்ரங்கள் கூடின பரமபாவனமான "வேதபர்வதம்" என்கிற (அதாவது வேதாத்ரி) யாதவாத்ரியிலே கிழக்குப் பார்த்து பாஞ்சராத்ரப் பிரகாரமாக அந்த திவ்ய விமானத்தைப் பிரதிஷ்டை செய்தான்.

## யாதவாத்ரி இருக்குமிடம், மகிமை முதலியவை

யாதவாத்ரியானது ஸஹ்ய பர்வதத்திற்குக் கிழக்கிலே காவேரிக்கு வடக்கிலும், ஸாக்ஷாத் ஆதிசேஷாவதாரமாய் இருந்து, பகவானுக்கு வைகுண்டத்திற் காட்டிலும் மிகவும் உகந்திருக்கிற நிலமானபடியாலே, "தென்பதரி" என்றும், சுற்றுப்புறம் இரண்டு யோஜனை வரையிலும், "வைகுண்ட வர்த்தன க்ஷேத்ரம்", என்றும் ப்ரஸித்தமாய், எட்டெழுத்தின் பொருளான ஸ்ரீமன்நாராயணனுக்கு ஆச்ரயமாய் இருக்கின்றது. பூர்வம், கிருதயுகத்திலே தத்தாத்ரேய பகவான் இந்த மலையிலே மறைகளை ப்ரவசனம் செய்ததாலே "வேதபர்வதம்" என்றும், த்ரேதா யுகத்தில் திருநாரணன் ஆனந்தமய திவ்ய விமானத்தோடு இங்கே எழுந்தருளின பின்பு "நாராயணாத்ரி" என்றும் வழங்கப்பட்டது. த்வாபரயுகக் கடைசியில் கண்ணன் முதலான யாதவர்கள் வந்து ஸேவித்ததால் "யாதவாத்ரி" என்றும் பெயராயிற்று. கலியுகத்தில் ஆதிசேஷாவதாரமான ஒரு ஸந்யாஸி வந்து ஜீர்ணோத்தாரணம் செய்வதினால் "யதிசைலம்" என்று பெயராகும்.

இப்படிப்பட்ட யாதவாத்ரியில் (மேல் கோட்டை) ஸனத்குமாரன் திருநாரணனுடைய திவ்ய விமானத்தைப் பிரதிஷ்டை செய்வித்தான்.

## செல்வப்பிள்ளை அவதாரக்கிரமம்

நான்முகன் தன் மகனான ஸனத்குமாரனுக்குத் திருநாரணனை எழுந்தருளப் பண்ணிக் கொடுத்த பின்பு, திருநாரணனைப் பிரிந்ததால் மிகவும் அவஸன்னன் ஆனான். அதைப் பார்த்து நாராயணன் தன்னுடைய மார்பிலிருந்து ஸ்ரீ பூஸமேதமான ஒரு மூர்த்தியை ஆவிர்ப்பாவம் செய்து கொடுத்தான். நான்முகன் அவரைத் தொழுது கொண்டு வரா நிற்க, ஒருகால், சக்ரவர்த்தித் திருமகன் "லப்த்வா குலதனம் ராஜா" என்கிறபடியே விபீஷணனுக்கு ஸ்ரீரங்கநாதனை எழுந்தருளப் பண்ணிக் கொடுத்தபின் தன்னகத்தில் திருவாராதனத்திற்கு அர்ச்சாமூர்த்தி இல்லாமையாலே இழவுபட்டிருக்கும் ஸமயம், இந்த மூர்த்தியை நான்முகன் சக்ரவர்த்தித் திருமகனுக்கு எழுந்தருளப் பண்ணிக் கொடுத்தான். அதுமுதல் ஹ்ருதயோத்பவன் என்கிற திருநாமமுடைய இவருக்கு (செல்வப்பிள்ளைக்கு) ராமப்பிரியன் என்று திருநாமமாயிற்று.

## செல்வப்பிள்ளை கண்ணன் திருமாளிகைக்குச் சேர்ந்த கிரமம்

சக்ரவர்த்தித் திருமகன் "அன்று சராசரங்களை" என்கிறபடியே, திருவயோத்தியிலிருந்த சராசரங்கள் எல்லாவற்றையும் கூட்டிக் கொண்டு தன்னுடைச் சோதி சேரும் பொழுது இந்த ராமப்பிரியனை சிறிய திருவடி கையிலே கொடுத்தான். அவன் சக்ரவர்த்தித் திருமகன் குமாரரான குசமகாராஜனுக்குக் கொடுத்தான். குசன் தன் பெண் குழந்தையான "கனகமாலினிக்கு" ஸ்த்ரீதனமாய் கொடுத்தான். அந்த கனகமாலினி யதுவம்சத்தில் யதுசேகரன் என்கிற வரனைக் கைப்பிடித்ததால், அந்த வம்சக் கிரமத்தாலே "ராமப்ரியன்" கண்ணனுடைய திருமாளிகையிலேயும் ஸேவையைக் கைக்கொண்டு நின்றான்.

## வைரமுடி சரித்திரம்

ஒருகால் விரோசனன் என்கிற அசுரன் தன் தகப்பனான ப்ரஹ்லாதன் விஷயத்தில் தேவதைகளுக்கு இருக்கும் விசுவாசத்தைப் பற்றித் தானும் அவர்களோடுகூட பாற்கடலில் பள்ளிகொண்ட அநிருத்த பகவானை ஸேவித்துக் கொண்டிருந்து, பகவான் யோகத்துயில் கொண்டிருக்கும் பொழுது, யாருமில்லாத ஸமயத்தில் பகவானுடைய கிரீடத்தைப் பறித்துக் கொண்டு பாதாள லோகம் சேர்ந்தான். பிறகு அந்தரங்க கைங்கர்யபரர்கள் பகவானுடைய திருமுடியைக் காணமல் இது "விரோசனன் செய்த தீம்பு" என்று சங்கித்து கருடாழ்வானை அனுப்பினார்கள். வைனதேயன் பாதாள லோகம் சென்று விரோசனனை ஜெயித்து அநிருத்த கிரீடத்தை மீட்டுக் கொண்டு மஹாவேகத்துடன் ஆகாய மார்க்கமாக வாரா நின்றான்.

## வைரமுடியைக் கண்ணனுக்கு ஸமர்ப்பித்தது.

இப்படிப் பெரிய திருவடி ஆகாய மார்க்கத்தில் வரும் பொழுது தன்னுடைய கதி தடைபட்டதைப் பார்த்து விஸ்மிதனாய், நான்கு பக்கமும் பார்த்தாலும் ஒன்றும் புலப்படாமல் கீழே பூமியைப் பார்த்தான். மயில் கண்களாலும் குஞ்சா மணிகளாலும் அலங்கிருதனாய் வேணுகானம் பண்ணிக்கொண்டும் பிருந்தாவனத்தில் ஆனிரைகளைக் காத்துக் கொண்டுமிருக்கிற கோபாலனைக் கண்டான். பரமானந்த பூரிதனாய் "இத்தாலே தான் என்னுடைய கமனம் நழுவிற்று" என்று நிச்சயித்து பகவானுடைய கருத்தின்படி அந்தக் கிரீடத்தைக் கண்ணனுடைய சிரஸ்ஸிலே ஸமர்ப்பித்தான். ஆனால் அநேக யோசனை விஸ்தாரமான அந்த முடியானது பகவானுடைய ஸங்கல்பத்தாலே கண்ணனுடைய சிரஸ்ஸிற்குத் தகுதியாக மாறிவிட்டது. பிறகு கண்ணனுக்குப் பிரதக்ஷிண நமஸ்காரங்களைப்பண்ணி கருடன் பாற்கடல் சேர்ந்தான். அங்கு எல்லோருக்கும் இந்த விஷயத்தைச் சொல்ல அவர்களும் ஆனந்தித்தார்கள்.

## கண்ணன் செல்வப்பிள்ளைக்கு வைரமுடியை ஸமர்ப்பித்தது.

### நம்பி மூத்தபிரான் நாராயணாத்ரிக்கு வந்தது.

கண்ணன் தன் கிருஹார்ச்சையான ராமப்பிரியனுக்கு (செல்வப் பிள்ளைக்கு) அந்த முடியை ஸமர்ப்பித்தான். அது அவனுடைய ஸங்கல்பத்தாலே செல்வப் பிள்ளைக்குத் தகுதியாய் போக்யமாய்த் தலைக்கட்டிற்று. இவ்விதமாக வைர முடியைச் சாற்றி ராமப்ரியனை நித்யாராதனம் செய்துகொண்டிருந்தான். இப்படி இருக்கும் பொழுது ஒரு ஸமயம் நம்பிமூத்தபிரான் (பலராமன்) தீர்த்த யாத்ரைக்காக எழுந்தருளின காலத்தில் இந்த நாராயணாத்ரிக்கு வந்து கல்யாணி தீர்த்தத்தில் அவகாஹித்து, ஆனந்தமய திவ்ய விமான மத்யஸ்தரான திருநாராயணப்பெருமானை ஸேவிக்க, தம்முடைய க்ருஹார்ச்சையான ராமப்ரியனைப் போலவேயிருக்கிறார் என்று அறிந்து, துவாரகைக்குப் போய் "தென் தேசத்தில் தென் பதரி என்னும் நாராயணாத்ரியில் நம்முடைய ராமப்ரியனைப் போலவே யிருக்கும் ஒரு பெருமாள் இருக்கிறார்" என்று சொன்னார். கண்ணன் இதை ஒப்புக்கொள்ளாமல், நம்பிமூத்தபிரான், யாதவர்கள் எல்லோரையும் அழைத்துத்தானே ராமப்ரியனையும் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு நாராயணாத்ரிக்கு வந்து, திருநாரணன் முன்பே எழுந்தருளப்பண்ணி எல்லோரும் ஸேவித்து, "இருவரும் ஒரே ரூபத்தை உடையவர்கள்" என்று சம்மதித்து ஆனந்தித்தார்கள்.

## நாராயணாத்ரிக்கு யாதவாத்ரி என்று பெயர் வந்தது.

### மூலவரும், உத்ஸவரும் சேர்ந்தது.

இப்படி யாதவர்கள் எல்லோரும் ஸ்ரீராமப்பிரியனை (செல்வப்பிள்ளையை) அங்கேயே எழுந்தருளப்பண்ணிஅந்தந்தஉத்ஸவகாலங்களில் தாங்களும் அங்கேயே சென்று உத்ஸவாதிகளை நடத்தி வந்தபடியால், இந்த மலைக்கு "யாதவாத்ரி" என்று அது முதல் திருநாமமாயிற்று. இப்படித் திருநாரணன், செல்வப்பிள்ளை இருவரும் ஒரே இடத்திலே மூலபேரமாயும், உத்ஸவபேரமாயும் நம்முடைய பாக்கியாதிசயத்தாலே சேர்ந்தார்கள்.

## கல்யாணதீர்த்தத்தின் மகிமை

ஆதிவராஹன் ஸ்ரீ பூமிப்பிராட்டியை எடுத்து வந்தபொழுது அந்த சிரமத்தால் திருமேனியில் உண்டான வியர்வையானது "கல்யாண தீர்த்தமாய்" பரிணமித்தது. ஸ்னானமாத்திரத்தால் எல்லோருடைய பாவத்தையும் போக்கும் கங்கை, எல்லா தீர்த்தங்களோடும் சேர்ந்து வந்து தன்னுடைய ஸகல பாபங்களையும் போக்கிக்கொள்ளுகைக்காக வருஷந்தோறும் பால்குன மாஸத்தில் இந்த கல்யாணி தீர்த்தத்தில் வாஸம் செய்கிறாள். பின்னும், இந்த தீர்த்தத்தின் கரையிலே பண்ணின தபஸ், தானம் முதலான புண்ய கார்யங்களெல்லாம் இதர புண்ய க்ஷேத்ரங்களில் பண்ணினதைவிட மிகுதியான பலங்களைக் கொடுக்கும்.

## ஸுசரிதோபாக்கியானம்

வயது முதிர்ந்த, ஏழையான ஸுசரிதன் என்னும் ஒரு அந்தணன் எப்பொழுதும் தீர்த்தயாத்ராபரனாய் இருந்தான். அவன் இந்த யாதவாத்ரியையும், கல்யாண தீர்த்தத்தையும் பற்றிக் கேட்டதில்லை. இரண்டு பிள்ளைகளுடனும், பத்னியுடனும்கூட கங்கைக்கு ஸ்நானத்திற்காகப் புறப்பட்டான். ஆனால், கங்காநதி அவன் கண்ணுக்கிலக்காகவில்லை. கங்கையில் ஸ்நானம் செய்து கொண்டிருந்தவர்கள் "இதுதான் கங்கை" என்று சொன்னாலும், கங்கை அவனுக்குத் தென்படாததால், ஸுசரிதன் மிகவும் வருந்தினான். அப்பொழுது ஒரு பெண் வந்து, "ஐயா அந்தணரே! கல்யாண தீர்த்தத்தில் குளித்திருப்பீரா?" என்றாள். ஸுசரிதன் அதற்கு, "அதன் பெயரையே கேட்டதில்லையே!" என்றான். "அங்கே சென்று ஸ்நானம் செய்து வாரும்" என்றாள் அந்தப் பெண். அந்தணன், "எனக்கு அங்கே செல்ல சக்தியில்லை. அப்படி, அங்கே சென்றாலும் மறுபடி இங்கே திரும்பிவர முடியும் என்ற

நம்பிக்கையில்லை" என்றான். அந்த கன்னிகை "ஆனால் 'கல்யாணி' என்று மூன்று தடவை நீங்கள் நாலுபேரும் அனுஸந்தானம் செய்து இங்கே கங்கையில் ஸ்நானம் செய்யுங்கள்" என்றாள்.

இப்படி கன்யாரூபமாக வந்து சொன்ன கங்கையின் வார்த்தையைக் கேட்ட பிறகு தான், அந்த பிராமணனுக்கு கங்காநதி கண்ணுக்கு இலக்காயிற்று. மூன்று தரம் 'கல்யாணி' என்று சொல்லி ஸபரிவாரமாக கங்கையில் மூழ்கினான் ஸுசரிதன். உடனேயே எழுந்திருந்து பார்த்தால் கல்யாணியாயிருந்தது. அங்கு இருந்தவர்கள் தீர்த்தத்தி லிருந்து எழுந்து வரும் நாலுபேரையும் பார்த்து ஆச்சரியத்தாலே அவருடைய வரலாற்றைக் கேட்டார்கள். ஸுசரிதன் நடந்த விஷயத்தை எல்லாம் சொல்லி, "இது என்ன இடம்? இது என்ன தீர்த்தம்?" என்று கேட்டான். "இது யாதவாத்ரி, கல்யாண தீர்த்தம்" என்று அவர்கள் சொல்ல, அந்த தீர்த்தத்தின் மகிமையைக் கண்டும், கேட்டும் விஸ்மிதராய்க்கொண்டு, ஸுசரிதனும், அவன் பார்யா புத்ரர்களும் அங்கேயே நித்ய வாஸம் செய்து கொண்டிருந்தார்கள்.

யாதவாத்ரியில் ஸுசரிதனுக்கு மூன்றாவது பிள்ளை பிறந்தது. அதற்கு நாராயணன் என்று திருநாமம் சாற்றினான். குழந்தையின் ஏழெட்டுவருஷங்களுக்குள்ளாக அந்ததேசத்தில் க்ஷாமம் ஒன்றுஏற்பட்டது. கஷ்டத்தைப் பொறுக்க முடியாமல், பத்னியுடைய நிர்பந்தத்துக்கிணங்கி ஸுசரிதன் இரண்டு பிள்ளைகளையும் கூட்டிக்கொண்டு தமிழ்நாட்டரசரைப் பார்க்கப் போனான். நான்காறு மாஸ காலம் காத்திருந்து, நகரவாஸத்தின் கஷ்டத்தை எல்லாம் அனுபவித்து, கடைசியில் பெரும் பிரயத்னம் செய்து, அரசனைப் பார்த்துக் கொஞ்சம் திரவ்யத்தை வாங்கிகொண்டு திரும்பினான்.

யாதவகிரியில் ஸுசரிதனுடைய மூன்றாவது குமாரன் நாராயணன் "அம்மா! ரொம்பவும் பசிக்கிறது, எனக்கு கொஞ்சம் பிரஸாதத்தைக் கொடு", என்று தாயைக் கேட்டான். அவள் ஒரு பாத்திரத்தில் பிரஸாதத்தைக் கொடுத்தாள். "இது பகவானுக்கு அமுது செய்யப் பண்ணினது அன்று"என்று சொல்லித் தான் சாப்பிடாமல் திருநாரணன் திருமுன்பே ஸமர்ப்பித்து, பக்தியுடன், "நீ இதை அமுதுசெய்" என்று சொல்லிக் கொண்டு வெளியிலே நின்றிருந்தான். திருநாரணன் பிராட்டியோடும்கூட வந்து பிரஸாதத்தை அமுது செய்து விட்டான்.

குழந்தை வெறும் பாத்திரத்தைப் பார்த்து மிகவும் ஸந்தோஷத்தோடு, தாயின் அருகே சென்று, "அம்மா, நீ கொடுத்த பிரஸாதத்தை பகவான் அமுது செய்து விட்டார். எனக்கு ரொம்பவும் பசிக்கிறது; பிரஸாதத்தைக் கொடு" என்று கேட்டான். அதற்கு அவள் "அர்ச்சாமூர்த்தியான பகவான்பிரஸாதத்தை அமுது செய்வானா? எங்கேயோ பூனைக்குட்டி சாப்பிட்டிருக்கும்! இந்த க்ஷாமத்தில் அப்படிச் செய்தால் மீண்டும் சோற்றை உனக்குத் தர முடியுமா? பிச்சை எடுத்துச் சாப்பிடு. போ" என்று சொல்லிக் கையில் ஒரு பாத்திரத்தைக் கொடுத்து அனுப்பினாள்.

அக் குழந்தை அங்குள்ள வீடுகளுக்கெல்லாம் பிச்சைக்காகப் புறப்பட்டான். அவன் பிச்சைக்காக எங்கெங்கு போனானோ, அந்தந்த கிருஹத்தில் பிராட்டி வந்து பிரஸாதத்தைப் பிச்சையாகக் கொடுத்தாள். குழந்தை தன் அகத்திலே போய் தாய் கையில் தான் ஸம்பாதித்த பிக்ஷையை கொடுத்தான். உடனேயே அவை எல்லாம் ரத்னங்களாக மாறினது. அதைப் பார்த்தாள் தாய். ஆசை பிறந்தது. மறுபடியும் மறுபடியும் அனுப்பினாள். இப்படி ஏழுதடவை தன் பிள்ளையை பிக்ஷைக்கு அனுப்பினாள். உலகத்திற்கெல்லாம் தாயான பிராட்டி ஏழுதடவையும் ரத்தின பிக்ஷை கொடுத்தாள். எட்டாவது தடவை பிராட்டி அன்ன பிக்ஷையையே கொடுத்தாள். இருவரும் அதைச் சாப்பிட்டு திருப்தி அடைந்தார்கள். ஏழுதரம் கிடைத்த ரத்ன பிக்ஷையினால் பிறவாத திருப்தி,

இப்பொழுது இந்த பிரஸாதத்தால் பிறந்தது.

இதுவரையிலும் கவலையில்லாமலிருந்த இவர்கள் தனம் கிடைத்ததும் கொஞ்சமும் உறங்கவில்லை. அந்த தனத்தையே காத்திருந்தார்கள். அவ்வளவிலே, அரண்மனையிலிருந்து ஸுசரிதன் கொஞ்சம் திரவ்யத்தை வாங்கிக்கொண்டு தன் இரண்டு பிள்ளைகளுடன் வரும்பொழுது, வழியில் திருடர்கள் அவனை அடித்துக் கையிலிருந்ததை எல்லாம் பறித்துக்கொண்டு போனார்கள். அப்பொழுது ஸுசரிதன், "திவ்யதேசத்திலிருந்து புருஷோத்தமனான நாராயணன் கொடுக்கும் பரமபுருஷார்த்தத்தை விட்டு அனர்த்தத்தை விளைவிக்கும் அர்த்தத்தை ஆசைப்பட்டு புருஷாதமனான மானிடனை ஆச்ரயித்தேனே! நகரவாஸமாகிற நரகவாஸத்தைப் பண்ணினேனே! எனக்கு இந்த தண்டனை போதாது" என்று வருத்தப்பட்டுக்கொண்டு வந்து வீட்டில் பார்த்தபோது, எல்லாம் ரத்னமயமாக இருந்தது. குழந்தையைக் கேட்டான். குழந்தை அவனுக்கு எல்லாவற்றையும் சொல்லவே, நிர்ஹேதுகமான பகவானுடைய கடாக்ஷத்தை ஆச்சரியத்துடன் நினைத்து நினைத்து அந்த பணத்தாலே பகவத் பாகவத கைங்கர்யத்தைப் பண்ணுநின்றான்.

அப்படி நித்ய ததீயாராதனம் செய்யுமிவனுடைய ஐச்வர்யத்தைக் கண்டு சில திருடர்கள், "இதைப் பறிக்க வேண்டும்" என்று வைஷ்ணவ வேஷத்தைப் பூண்டு கல்யாண தீர்த்தத்தில் ஸ்நானத்தை நித்யமும் செய்துகொண்டு பன்னிரண்டு திருமண் காப்பையும் சாத்தி, துளஸி நளினாக்ஷ மாலைகளை தரித்து திருநாரணன் சேவையை நாள்தோறும் செய்துகொண்டு வந்தார்கள். இப்படி ஸுசரிதன் திருமாளிகையில் பாகவத ஸ்ரீபாத தீர்த்தத்தையும் பகவத் பிரஸாதத்தையும் ஸ்வீகரித்துக்கொண்டு ஐச்வரியத்தை அபகரிக்க ஸமயம் பார்த்திருந்த திருடர்களுக்கு, இந்த ஸத்ஸங்கத்தாலும் நல்ல வேளையினாலும் கர்மம் கழிந்து, நல்ல ஞானம் பிறந்தது. பிறகு ஞானத்தால் பச்சாத்தாபம் பிறந்து, ஸுசரிதனை தண்டனிட்டு, "உம்முடைய பணத்தைப் பறிக்க வந்த மகாபாவிகள் நாங்கள், எங்களுடைய பாபத்திற்குத் தகுதியான பிராயச்சித்தத்தை நியமித்து, எங்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். அப்பொழுது ஸுசரிதன் "தனம் மதீயம் தவ பாத பங்கஜம்" என்னும்படி திருநாராணன் திருவடிகள் என்கிற அழியாத செல்வம்தான் என்னுடைய ஐச்வர்யம். அது யாராலேயும் திருட முடியாது" என்பது முதலாக ஞானோபதேசம் செய்து, அவர்களுக்கெல்லாம் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அனுக்ரஹம் பண்ணினான். இப்படித் திருடர்களுக்கே மோக்ஷம் வந்தபொழுது, ஸுசரிதனுக்கும் பகவதாபிமுக்யம் உள்ளவர்களுக்கும் சொல்ல வேண்டாவிறே!

## சதுர்வேதி உபாக்யானம்

முன்பு, நான்கு வேதங்களையும் ஓதியதால் சதுர்வேதி என்றும், பெயர் பெறுகைக்காக வந்தவர்களுக்கெல்லாம் சோறு இடுகிறதால் ஸர்வாதித்யன் என்னும் பெயருடையனும், திரவ்யார்ஜனத்தில் சதுரனும், டம்பத்திற்காக யாகங்களைச் செய்கின்றவனும், கேவல நாஸ்தினும் உள்ள ஒரு ராஜ புரோகிதன் இருந்தான். ஒரு நாள் அவன் நால்வர் அந்தணர்களைச் சேர்த்துக் கொண்டு சிராத்தம் பண்ணிக் கொண்டிருக்கும் ஸமயத்தில், யாதவாத்ரி நிவாஸியான ஹரிராதன் என்கிற விருத்த ப்ராம்மணன் தன் குழந்தையை அழைத்துக்கொண்டு சதுர்வேதி யிருந்த ஊருக்கு வந்தான்.

வழி நடந்த ஆயாஸத்தாலேயும், பசி, தாகம் இவைகளினாலேயும் ரொம்பவும் சிரமப்பட்டு, சதுர்வேதியின் குணங்களை அறியாமல் அவன் வீட்டுக்கு வந்தான். ஹரிராதன் திருநாரணன் திருவடிகளிலிருந்த திருத்துழாயைக் கொடுக்கப் போகவே, சதுர்வேதி' "நம் வீட்டிலேயே வேண்டின திருத்துழாய்த் தோட்டங்கள் இருக்கும். இஷ்டமிருந்தால் உபநயனமில்லாத இந்த சிறு பையன் கை

யில் கொடு" என்றான். ஹரிராதன் "பைய னுக்குப் அதிகப் பசி, கொஞ்சம் பிரஸாதத் தைக் கொடுங்கள்" என்றான்· அதற்கு, சதுர் வேதி "நீ அந்தணன் அல்லவா? என் வீட் டில் இன்றைக்கு சிரார்த்தம் என்றது தெரி யாதா?" என்றான். "கொஞ்சம் அரிசியாவது கொடு" என்றான் ஹரிராதன். "என்ன பிசா சத்தைப் போல் தொந்தரவு செய்கிறாய்" என்றான் சதுர்வேதி, கால்கள் தளர்ந்து போயிருந்ததால், நிற்க முடியாமல் அந்தச் சிறு பையன் அங்கே முற்றத்தில் உட்கார்ந் தான். "யார் அவன்? கழுத்தைப் பிடித்து அப்பால் தள்ளிக் கதவைப் போடு" என்று சதுர்வேதி கதவை அடைத்தான். ஹரிராதன் புத்திரனுடைய கால் கதவுக்குள் அகப்பட்டுக் குழந்தை கீழே விழுந்தான். அப்பொழுது அந்த பாலன் மிகவும் நொந்து "நீ பாழாய்ப் போ" என்று சபித்தான். அதற்கு ஹரிராதன் அக்குழந்தையைப் பார்த்து, "அப்படிச் சொல்ல வேண்டாமப்பா!" என்று புத்தி சொல்லி, தான் ஏழு தடவை கோவிந்த நாமோச்சாரணம் செய்துவிட்டு அந்த கிரா மத்திலிருந்து புறப்பட்டான்.

ஸமீபத்தில் உபாதானம் பண்ணி ஜீவித் துக் கொண்டிருந்த விஷ்ணுராதன் என்ற ஏழை பிராம்மணன் இவர்கள் கஷ்டத்தைப் பொறுக்கமாட்டாது நடுப்பகல் நேரமாயிருந் தாலும் தன் வீட்டுக்கு அழைத்துப் போய் குழந்தையைத் தெளியப் பண்ணி வைத்து பகவன் நிவேதனம் செய்து ஆனந்தமாகப் பிரஸாதத்தை பரிமாறினான். ஹரிராதன் தன் குழந்தையுடன் உண்ண உட்கார்ந் திருந்த பொழுது, ஒரு த்ரிதண்டதாரியான ஸன்யாஸி நான்கு பேர் சிஷ்யர்களுடன் வந்து அமுதுசெய்தான். இப்படி ஏழு பேரும் ஸஹபங்க்தியில் உட்கார்ந்து அமுது செய் தார்கள். அன்றையிலிருந்து விஷ்ணுராதன் வீட்டில் தளிகைப் பாத்திரங்கள் எல்லாம் அக்ஷயமாயிற்று. அவர்கள் சாப்பிட்ட இடத் தில் நிதி அகப்பட்டது.

அந்த ஸன்யாஸிதான் தத்தாத்ரேயாவ தாரம் பண்ணி வந்த பகவான். சிஷ்யர்கள் நாலு வேதங்கள். "பாகவதர்கள் அமுது செய்யுமிடத்தில் பகவான் பின்னாலேயே இருக்கிறான்" என்கிறது இதனாலேயே தோன்றிவரும். இப்படி யாதவாத்ரிவாஸி யான ஹரிராதனுடைய ஆராதனத்தாலே விஷ்ணுராதனுக்கு அமோகமான ஐச்வர்யம் உண்டாயிற்று.

இது நிற்க, ஹரிராதனைத் தள்ளிக் கதவை அடைத்த சதுர்வேதி வீட்டில் நிமந்த்ரணக் காரர் வருவதற்கு முன்னேயே பாம்பு பாலில் விஷம் உமிழ்ந்தது. அவர்கள் அதைக் குடித்து இறந்தார்கள். அவர் புத்திரர்கள் போய் தங்கள் அரசனிடத்தில் "எங்கள் தகப்பனாரைச் சதுர்வேதி கொன்றான்" என்று முறையிட்டார்கள். ராஜ படர்கள் வந்து சதுர்வேதியை மர்ம ஸ்தானங்களில் அடித்தார்கள். சதுர்வேதி முடிந்தான். தங் களையும்" இப்படியே சாக அடிப்பார்" என்கிற பயத்தால் அவனுடைய நான்கு பிள்ளைகள் காட்டுக்கு ஓடினார்கள். அவர்களில் ஒருவன் ஒரு பாழும் கிணற்றில் விழுந்தான். ஒருவன் மரத்தில் ஏறி விழுந்தான். ஒருவன் புலிக்கு இறையானான். இப்படியே நான்கு பிள்ளை களும் மாண்டனர். சதுர்வேதியின் மனைவி கழுத்தைக் கயிற்றினால் இறுக்கிக்கொண்டு உயிர்நீத்தாள். இரண்டு பெண் குழந்தை களும் கதவை அடைத்துக்கொண்டு நெருப் பைக் கொளுத்திப் பிராணனை விட்டார்கள். இப்படி வெகு விரைவிலேயே அந்த குழந் தையின் சாபத்தின்படி எல்லோரும் இறந் தார்கள்.

பிறகு யமபடர்கள் சதுர்வேதியின் காலிலே பாசத்தைக் கட்டி யமதர்மராஜ னிடம் இழுத்துக் கொண்டு போனார்கள். சதுர்வேதி தர்மராஜனைக் பார்த்து, "நீ மிக வும் அநியாயம் செய்திருக்கிறாய். நான் ஸாங்கமாக நான்கு வேதங்களையும் ஓதி னேன். வருடந்தோறும் யாகங்களைச் செய்து கொண்டே இருந்தேன். அதிதிகளுக்கெல் லாம் அன்னதானத்தைச் செய்து கொண் டிருந்தேன். இப்படிப்பட்ட தார்மிகனை

எனக்கு யாதனைகளை நீ விதிக்கலாமோ?" என்றான்.

அதற்கு தர்மராஜன், "அந்தணனே! நீ செய்ததெல்லாம் உண்மைதான். ஆனால் பணம் திரட்டவும், டம்பார்த்தமாகவும் நீ எல்லாவற்றையும் செய்தாயல்லவா? பகவதா ராதன ரூபமாக நீ செய்ததுண்டோ? சொல். அது கிடக்கட்டும். அந்த யாதவாத்ரிவாஸி யான அந்தணன் உன்னகத்திற்கு வந்த பொழுது நீ செய்ததை எல்லாம் நினைத்திருப் பாயா? உனக்கு இவ்வளவு போதாது. அநேக நரகங்களை நீ அனுபவிக்க வேண்டி யிருந்தது. ஆனால் அந்த ஹரிராதன் உன் னகத்திலிருந்து புறப்படும் பொழுது ஏழுதரம் கோவிந்த நாமோச்சாரணம் செய்தான். அதனுடைய மகிமையினால் நரக பாதைகள் உனக்குத் தவறிப் போயிற்று. நீ ஸகுடும்ப னாக பிரம்மரக்ஷஸ்ஸாய்ப் போ. உன்னகத் தில் நிமந்த்ரணமிருந்தவர்கள் பெரும் கழுகு கள் ஆகுவார்கள்" என்று சபித்தான்.

உடனேயே சதுர்வேதி, யமனுக்கு தண்ட னிட்டு, "என்னுடைய அபராதங்களை மன் னிக்க வேண்டும். இந்த சாபத்திற்கு அவதி யைத் தெரியப்படுத்த வேண்டும்" என்று பிரார்த்தித்தான். அதற்கு யமன், "சில விஷ்ணு பக்தர்களுடைய தரிசனம் ஆனவுட னேயே சாபம் நீங்கும்" என்று உரைத் தான்.

அந்த நிமிடமே சதுர்வேதி ஸபரிவாரனாக அந்த ஜன்மத்துக்குத் தகுதியான வேஷ பாஷா ரூபாதிகளை உடைத்தான பிரம்ம ரக்ஷஸ்ஸாய் விந்த்ய பர்வதக் காட்டிலே விழுந்தான். அநேக வருஷங்கள் இப்படி இருக்க, ஒரு ஸமயம் காஷ்மீர தேசத்து யாத் திரிகர்கள் சிலர் தென்தேசங்களில் யாத்திரை செய்து கொண்டு, யாதவாத்ரியில் கல்யாண ஸரஸ்ஸிலே ஸ்நானத்தைச் செய்து திருநார ணனை ஸேவித்து, பின் வழி நடந்து வரும் பொழுது அவ்விடம் வந்தார்கள்.

அவர்களில் இரண்டு பாகவதோத்தமர் களையும், துணையில் அநேக வைஷ்ணவர் களையும் பிரம்மரக்ஷஸ்ஸான சதுர்வேதி பார்த்தான். அவர்களெல்லோரும் திருவடி சோதித்துக்கொண்டு நின்றிருந்த தீர்த்தத் தைக் குடித்து, அவர்கள் அமுது செய்து கீழே போட்ட பிரஸாத சேஷங்களையும் உண்ட தும், அந்த பிரம்ம ரக்ஷஸ்ஸுக்கு பூர்வஜன் மத்தினுடைய நினைவு உண்டாயிற்று."நமன் சொல்லிய நம் சாபவிமோசகர்கள் இவர்கள் தான்" என்று தெரிந்து ஒதுங்கி நின்று தண்டனிட்டான்.

தன்னுடைய வரலாற்றை யெல்லாம் சொல்லி அனுக்ரஹிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தான். பரமதயாளுக்களான அவர் கள், இவனுக்கு ஞானோபதேசம் செய்து, "நீ யாதவாத்ரிவாஸியான பாகவதனிடத்தில் அபசாரப் பட்டதற்காக இந்த கஷ்டங்கள் வந்தன. நீ இந்த கஷ்டங்களை யாதவாத்ரி வாஸத்தினாலேயே நீக்கிக்கொள்ள வேண் டும். நீ அங்கே போய் அந்த மலையை ப்ர தக்ஷிணம் செய்துகொண்டு, அங்குள்ள பாக வதர்கள் ஸ்ரீ பாததூளியை சிரஸா வஹித்து உன்னுடைய பாபங்களை நீக்கிக்கொள். அங் குள்ள பகவான் கிருபையால் கிரமமாக இந்த சாபம் நீங்கும்" என்று நியமித்துப் போனார் கள்.

உடனேயே அந்த பிரம்மரக்ஷஸ் ஸபரி வாரமாக யாதவாத்ரிக்குச் சென்று அப்படியே செய்து கொண்டிருந்த பொழுது, திருநார ணன், தன் த்வாரபாலர்களான ஜயவிஜயர் களை அழைத்து, "பிரம்ம ரக்ஷஸ்ஸான சதுர் வேதியை க்ரமமாக அஷ்டதீர்த்தங்களில் ஸ்நானம் செய்வித்து, மறுபடியும் அந்தண ஜன்மம் வந்தபிறகு, திருக்கல்யாணியில் ஸ்நானம் செய்வித்து, ஸமாச்ரயணத்தைச் செய்து, இவனை ஸபரிவாரனாக வைஷ்ணவ னாக்கி நம்மிடத்துக்கு அழைத்து வாருங்கள்" என்று நியமித்தான். ஜயவிஜயர்களும் அப் படியே செய்த பிறகு, திருநாரணன் ஸபரி வாரமாக வந்த சதுர்வேதியைத் தன் கிருபை யாலே கடாக்ஷித்து தன்னுடைச் சோதியான பரமபதத்தைக் கொடுத்தருளினான்.

இப்படி யாதவாத்ரியில் நித்யவாஸம் செய்யும் பாகவதர்களிடத்தில் அபராதத்தைச் செய்தவர்களுக்கு வரும் கஷ்டத்தையும், அந்த பாகவதர்களாலேயே அதனுடைய பரிஹாரத்தையும், நாரதர் வியாஸாதிகளுக்கு உரைத்தார்.

## நாளீஜங்கன் உபாக்யானம்

ஒருகால் தத்தாத்ரேயரும், சாண்டில்யரும் கல்யாண தீர்த்தக்கரையில் சாஸ்த்ரார்த்த விசாரங்களைச் செய்து கொண்டிருக்கும் பொழுது, திக்விஜயத்தைச் செய்துவந்த தத்தாத்ரேய சிஷ்யர்கள் தாங்கள் வரும்பொழுது காட்டிலே பார்த்த ஆச்சரியத்தை அவர்களிடம் சொன்னார்கள். ஒரு பெரிய புலியானது ஒரு வேடனைத் துரத்திக்கொண்டு போயிற்று. அவன் ஒரு மரம் ஏறினான். அதிலே ஒரு குரங்கு இருந்தது. அந்தப் புலி குரங்கைப் பார்த்து "வேடனைத் தள்ளிவிடு," என்று சொல்லிற்று. "என் வீட்டுக்கு வந்தவனைத் தள்ளமாட்டேன்" என்றது குரங்கு. பிறகு குரங்கு உறங்குகிறபொழுது, புலி வேடனைப் பார்த்து "அதைத் தள்ளிவிடு. உன்னைவிட்டுப் போவேன்," என்று சொல்லிற்று. பாவியான வேடன் குரங்கைத் தள்ளிவிட்டான். புலி குரங்கைப் பிடித்து, "இப்பொழுதும் உன்னை விடுகிறேன். உன்னைத் தள்ளின க்ருதக்னனை வேடனைத் தள்ளிவிடு," என்று சொல்லிற்று. அதற்குக் குரங்கு "இப்பொழுது இந்தப் பாவியைத் தள்ளாதிருப்பேனா?" என்று சொல்லி மரத்தில் ஏறிப் போய், "என் வீட்டுக்கு வந்தவனை எப்படியிருந்தாலும் தள்ளமாட்டேன். நீ உன் வழியைப் பார்த்துக் கொள்," என்று சொல்லிவிட்டது. திர்யக்கான ஜன்மங்களிலும் இப்பேற்பட்ட தர்மமுண்டா! என்ன ஆச்சர்யம்!—என்று அவர்கள் விண்ணப்பித்தார்கள்.

சாண்டில்யர் "சரணாகதரக்ஷணம் என்கிற இந்த தர்மம்தான் எல்லா தர்மங்களிலும் மேலானது. இது பசுக்களிலும், பக்ஷிகளிலும்கூட இருக்கும். இதைக் காட்டிலும் ஆச்சரியமான மற்றொன்றை சொல்லுகிறேன் கேளுங்கள்," என்று சொல்லத் தொடங்கினார்.

"ஒரு காட்டிலே ஒரு மரத்தில் நாளீஜங்கன் என்கிற ஒரு அன்னம் இருந்தது. அந்த இடத்துக்கு ரொம்ப ஏழையும் நீசனுமான ஒரு பிராம்மணன், பசி, தாகம், வழிநடந்த களைப்பு எல்லாவற்றாலும் மிகவும் கஷ்டப்பட்டு வந்தான். அந்த அன்னமானது மிகவும் ஆதரவுடன் ஸர்வோபசாரங்களையும் செய்து அவன் கஷ்டத்தை எல்லாம் விசாரித்துக் கருணையாலே 'ஐயா! அந்தணனே, என்னுடைய தோழனை அரக்கரரசு இருக்கிறான். அவனைப் பார்த்து நான் சொன்னதாகச் சொல்லி உனக்கு வேண்டிய பணத்தை வாங்கிக்கொண்டு போ,' என்று சொல்லிற்று.

"அவன் மிக்க ஸந்தோஷத்துடன், அன்னம் கூறிய இடத்திற்குச் சென்று தனக்கு முடிந்தவரையிலும் பணததைத் தூக்கிக் கொண்டு வந்த வழியாகவே வந்தான். வரும் பொழுது அந்த அன்னம் படுத்திருந்தது. பசித்திருந்த இவன் அதைக் கொன்று சமைத்து சாப்பிட்டான். பிறகு வழி நடந்தான். அரக்கர் அரசு அனுப்பின ஆட்கள் பார்த்தபொழுது அந்த அன்னம் தென்படவில்லை. கீழே பார்க்கிறபொழுது, அதன் சிறகுகள் முறிந்து விழுந்திருந்ததைக் கண்டார்கள். 'அந்த பாவியே இதைச் செய்திருக்க வேண்டும்,' என்று யோசித்து அவனைத் தேடி வந்தார்கள். அவனுடைய முகபாவம், பயம், மிச்சமாய் வைத்திருந்த மாமிசம், இவைகளைப் பார்த்து இவனே இந்தத் தொழிலைச் செய்திருக்க வேண்டும் என்று நிச்சயித்து அவனைக் கொன்றார்கள்.

"அந்த நாளீஜங்கன் என்கிற அன்னம் தன்னுடைய ஸுக்ருதத்தாலே ஸ்வர்க்கத்திற்குப் போயிற்று. அந்த அந்தணன் நரகத்துக்குப் போனான். நாளீஜங்கன் என்கிற அந்த அன்னம் தேவதைகளைப் பிரார்த்தித்து நரகத்திலிருந்து அந்த அந்தணனை

அழைத்துத் துணையாகவே ஸ்வர்க்கத்தை அனுபவித்தது.

"பாருங்கள். நீங்கள் சொன்னதில், குரங்கு சாகவில்லை. நான் சொன்னதில் அன்னத்திற்கு உயிரே போயிற்று. ஆனாலும், லோகாந்தரத்திலும், வேறொரு உடல் வந்த பொழுதிலும், அந்த அந்தணனைக் காப்பாற்றிற்று. அது வானரம். இது பக்ஷி. 'சரணாகத ஸம்ரக்ஷணம்' என்கிற தர்மம் இப்படிப் பட்டது. இப்படி இருக்கும் பொழுது ஸர்வஜ்ஞனாய், ஸர்வசக்தனாய், ஸர்வஸ்வாமியாய், ஸ்ரீய: பதியான எம்பெருமானிடத்தில் இந்த சேதனன் ஸ்வரூபஜ்ஞானத்தை அறிந்து சரணம் அடைந்தானேயானால், பலத்தில் ஸம்சயமே கிடையாது," என்று சாண்டில்யர் உரைத்தார்.

இந்த ஸமயத்திலே வேதவ்யாஸ ரிஷிக்குத் தகப்பனாயும் தத்வங்களை யதாவத்தாக அறிந்திருக்கிறவராயும் உள்ள பராசர மகரிஷியும், அவருடைய சிஷ்யரான மைத்ரேயரும், அங்கே வந்து தத்தாத்ரேயர், சாண்டில்யர்களுக்கு தண்டனிட்டு, அவர்களாலே ஸத்காரத்தை அடைந்தனர். பிற்பாடு தத்தாத்ரேயர் "நீங்கள் இங்கே வந்ததென்?" என்று கேட்க, பராசரர், "நான் வடபதரிக்குச் சென்றபோது நாராயண ரிஷி, 'பராசரரே, நீர் தென்பதரியான நாராயணாத்ரியில் சென்று தத்வஹித புருஷார்த்தங்களை நன்றாக உரைக்கும் புராண ரத்னமான ஸர்வப்பிரமாணமான விஷ்ணு புராணத்தை மைத்ரேயருக்கு பிரவசனம் செய்யும்,' என்று நியமித்தார். அதற்காக இங்கே வந்தேன்" என்றார். இப்படி நான்கு பேரும் இந்த திவ்ய தேசத்திலே பகவானை அநேக காலம் வரையிலும், ஸேவித்துக் கொண்டிருந்தார்கள்.

## ஸப்த க்ஷேத்திரங்கள்

ஸ்ரீ கல்யாண தீர்த்தத்தில் கிழக்கே மலையின் மேலே ஸ்ரீ யோகாநரசிங்கம் பிரஹ்லாதாழ்வானுக்குப் ப்ரத்யக்ஷமாய் ஸாந்நித்யம் அளித்து எல்லோருக்கும் எப்பொழுதும் வேண்டியவற்றை எல்லாம் அனுக்ரஹித்துக் கொண்டு இருக்கிறார். இது நாரஸிம்ஹ க்ஷேத்திரம். இந்த மலையின் கீழே கிழக்குக் கரையில் வாராஹ க்ஷேத்திரம் இருக்கிறது. இங்கு விரதம், தானம், ஜபாதிகளைச் செய்தால் சீக்கிரமாக ஸித்தியை அடையலாம். இங்கே வராஹ நாயனார் பூமிப் பிராட்டியை ஏந்திவந்து தன் துடையின் மேல் உகந்து வைத்து, 'ச்லோகத்வயம்' என்கிற வராஹ சரம லோகத்தை அவளுக்கு உபதேசித்தார். இந்த கல்யாண தீர்த்தத்தின் தென்கரையிலே இளைய பெருமாளாலே செய்யப்பட்ட பர்ணசாலையில் சக்கரவர்த்தித் திருமகன் வாசம் செய்து கொண்டிருந்தான். ஆகையால் "ஸ்ரீகாரண்ய க்ஷேத்திரம்" என்று பெயராயிற்று. இந்த இடத்திலுள்ள திருத்துழாய் கட்டைகளாலே மணிகளைச் செய்வித்து இந்த மாலைகளை தரித்தால் மிகவும் விசேஷம். இந்த தீர்த்தத்தின் மேற்குக் கரையில் அஜ்ஞானத்தைப் போக்குமதான "ஞானச்வத்தம்" என்ற அரச மரம் இருக்கிறது. அதன் கீழே சுகர், புண்டரீகன், ருக்மாங்கதன், அம்பரீஷன், பிரஹ்லாதன் என்கிற ஐந்து பாகவதர்கள் தவம் செய்து பகவானை ஸாக்ஷாத்கரித்தார்கள். ஆனதினால் இதற்கு "பஞ்சபாகவத க்ஷேத்ரம்" என்று பெயராயிற்று. இந்த க்ஷேத்திரத்திற்கு மேற்கில் சிறிது தூரத்தில் "தார்க்ஷ்ய க்ஷேத்ரம்" என்கிறது இருக்கிறது. அதில் பகவானுடைய நியமன ப்ரகாரம் பெரிய திருவடி ச்வேத த்வீபத்திலிருந்து வெள்ளை மண்ணை (திருமண் காப்பு) கொண்டு வந்து வைத்தான். அது என்றைக்கும் அக்ஷயமாய் இருக்கும். அந்த ச்வேத ம்ருத்திகையினால் யாரொருவர் திருமண் காப்பை சாத்திக் கொள்வார்களோ அவர்கள் 'அபராஜித' என்கிற திவ்ய வைகுண்ட கதியை அடைவார்கள். மற்ற இரண்டு க்ஷேத்ரங்கள் தீர்த்தங்களைச் சொல்லும்பொழுது சொல்லப்படும்.

## அஷ்ட தீர்த்தங்கள்

நாஸ்திகரும், வேதபாஹ்யரும், குதிருஷ்டிகளும் வேதங்களை தூஷிக்க, வேதோத்தாரம்

செய்வதற்காக பகவான் தத்தாத்ரேய அவதாரம் செய்து நான்கு வேதங்களையும் நான்கு சிஷ்யர்களாகவும், அங்கோபாங்கங்களை சிஷ்ய, பிரசிஷ்யர்களாகவும் செய்துகொண்டு அவர்களுக்கு வேதார்த்தங்கள் எல்லாவற்றையும் யாதவகிரியிலுள்ள ஒரு தீர்த்தத்தின் கரையிலே உபதேசித்தார். ஆகையால் இந்த தீர்த்தத்திற்கு வேதபுஷ்கரணி என்று பெயர். இந்த புஷ்கரணியின் கரையிலே இருக்கும் சிலையில் காஷாய வஸ்த்ரத்தை வைத்து தத்தாத்ரேயர் பரிக்ரஹித்தார். ஆகையாலே அந்த சிலைக்கு பரிதானசிலா க்ஷேத்திரம் என்று பெயர். 'பரிதானம்' என்றால் 'உடுத்திக் கொள்ளும் ஆடை'.

தர்ப்ப தீர்த்தம் என்கிற தீர்த்தத்தின் கரையிலே விளைந்த தர்ப்பங்களால் தத்தாத்ரேயர் தம்முடைய நித்யானுஷ்டானத்தைச் செய்து கொண்டிருந்தார். உயிர்போகும் காலத்தில் இந்த தர்ப்பங்களை ஆசனமாகச் சேர்த்து உயிரை விட்டால் மோக்ஷம் தவறாது. இந்த தீர்த்தத்தின் கரையிலே சாண்டில்ய பகவான் பிரபன்னருடைய பாஞ்ச காலிகானுஷ்டானத்தையும் பகவத் சாஸ்த்திரமான பகவதாராதனத்துக்கு முக்கிய ப்ரமாணமான ஸ்ரீ பாஞ்சராத்ர சாஸ்திரத்தையும் பிரவசனம் செய்தார்.

தர்ப்ப தீர்த்தத்தின் வடக்கே பலாச தீர்த்தம் என்று ஒரு தீர்த்தம்; விச்வாமித்ர சாபத்தால் சண்டாளர் ஆன வஸிஷ்ட புத்திரர்களுக்கு இங்கே ஸ்நானத்தால் சாப விமோசனமாயிற்று. இந்த தீர்த்தத்திற்கு மேற்கே யாதவி என்று ஒரு ஆறு பெருகும். இதன் கரையிலே யாதவேந்திரன் என்கிற அரசன் யாகம் செய்து ஸ்வர்க்கம் அடைந்தான். அதனால் 'யாதவி' என்று பெயராயிற்று. பலாச தீர்த்தத்திற்கு வடக்கே பத்ம தீர்த்தம் என்கிற ஒரு தீர்த்தம் உண்டு. இதிலே பிறந்த தாமரை புஷ்பத்தால் திருநாரணனை நித்யார்ச்சனம் செய்து கொண்டிருந்தான் ஸனத் குமாரன். அதனால் பத்ம தீர்த்தம் என்று பெயர். இங்கு இருக்கிற தாமரை மணிகளைக் கழுத்தில் தரிப்பவர்கள் வைகுந்தத்தில் திவ்யாப்ஸரஸுக்கள் கையில் மாலையை சாற்றிக் கொள்வார். இதற்கு வடக்கில் மைத்ரேய தீர்த்தம் என்கிற தீர்த்தமுண்டு. இங்கேயே பராசரர் மைத்ரேயருக்கு ஸ்ரீ விஷ்ணுபுராணத்தை உபதேசித்தார். தென் தேசத்தார் சிஷ்யருடைய பெயரை முன்னிட்டு 'மைத்ரேய தீர்த்தம்' என்றும், வடதேசத்தார் ஆசாரியருடைய பெயரை முன்னிட்டு 'பராசர தீர்த்தம்' என்றும் சொல்லுவார்கள்.

மைத்ரேய தீர்த்தத்தின் வடக்கே நாராயண தீர்த்தம் இருக்கிறது. இதன் ஸமீபத்தில் யார் சரம ஸம்ஸ்க்காரத்தை அடைவார்களோ, அவர்களுக்கு இதே சரம சரீரமாகும். இதன் கரையிலே விஷ்ணுசித்தர் என்கிற பிரம்மசாரி ஸ்ரீமன் நாராயணனை ஸாக்ஷாத்கரித்து மோக்ஷ ஐச்வர்யத்தைப் பெற்றார். விஷ்ணுசித்தர் நாராயணாத்ரியில் பிறந்து மானியாயிருந்து ஸாங்க வேதாத்யயனம் பண்ணி, தாயும் தகப்பனும் கல்யாணம் செய்விக்க யத்னம் செய்கிற அளவில், நைமிசாரணியத்துக்குப் போய் உக்ரமாக தவம் செய்தார். அங்கே ஒரு அரசன் வந்து தனக்கு ஆண் குழந்தை இல்லாதபடியால் தன் பெண்ணையும் ராஜ்யத்தையும் கொடுப்பதாகச் சொல்லி அழைத்தான். அதற்கு இவர் "உன் பெண்ணை ரத்னத்தாலே ஸ்ருஷ்டி செய்திருக்கிறானா? மலமூத்ர, ரத்த மாம்ஸாதிகள் நிறைந்த தோல்பையல்லவா? உன் ராஜ்யம் ஒரு ராஜ்யமா? பஹுக்லேசகரமான நரகமல்லவா! இது யாருக்கு வேண்டும்!" என்று சொல்லிவிட்டார்.

பிறகு, இந்திரன் இவன் தவத்தைக் கெடுப்பதற்காக அப்ஸரஸுக்களை அனுப்பினான். விஷ்ணுசித்தர் அவர்களை, "குரங்குகள் போல் ப்ரவர்த்திப்பதால் குரங்குகள் ஆகுங்கள்", என்று சபித்தார். இதைப் பார்த்து இந்திரன் பிராம்மண வேஷத்திலே வந்து பிரார்த்தித்து இவர்களுக்குச் சாப விமோசனத்தைப் பண்ணிக்கொண்டு

போனான். ருத்ரன் வந்து "என்ன வரம் வேண்டும்" என்று கேட்கவே, "எனக்கு மோக்ஷம் வேண்டும்" என்றான். "அதைக் கொடுப்பதற்கு எனக்கு அதிகாரம் கிடையாது "என்று சொல்லிப்போனான்.

நான்முகன் வந்து "என் லோகத்தை உனக்குத் தருவேன்" என்று சொல்ல, "உன்னையும் என்னையும் சிருஷ்டித்தும் இந்த அதிகாரத்தைக் கொடுத்தும் வைத்திருக்கிற ஸ்ரீமன் நாராயணனைத் தவிர மற்றொரு தெய்வமுண்டோ? தயவு செய்து போய் வாரும்" என்றார்.

பிறகு இவருக்கு அஷ்டாக்ஷரத்தை உபதேசித்து "ஸன்மாக்க தேசிகன்" என்கிற ஆசாரியன் வந்து "குழந்தாய்! நீ நாராயணாத்ரியில் சென்று தவம் செய்" என்று சொல்ல, மறுபடியும் இந்த நாராயணாத்ரிக்கு வந்து நாராயண தீர்த்தத்தில் நித்யகர்மானுஷ்டானம் செய்துகொண்டு அதன் கரையிலே இருக்கும் நயன க்ஷேத்ரத்தில் தவம் செய்து கொண்டிருந்தார். பெரியதிருவடியில் ஏறி, மஹிஷீபரிஜன பரிச்சதர்களோடு ஸ்ரீமந் நாராயணனை ஸாக்ஷாத்கரித்து க்ருதார்த்தனாய் அவர் பரமக்ருபையாலே மோக்ஷ ஐச்வர்யத்தை அடைந்தான்.

இந்த தீர்த்தத்திற்கு கிழக்கில் நயன க்ஷேத்ரம் என்கிற இடமுண்டு. "நயதீதி நயனம்", அதாவது தன்னை ஆச்ரயித்தவர்களை மோக்ஷத்தில் சேர்க்கும் என்கிற அர்த்தத்தைக் கொண்டு, இந்தப் பெயர் வந்தது. இங்கே கேசவனுடைய ஸாந்நித்யம் இருப்பதால் மந்த்ரஸித்திகள் விரைவில் வளரும். விஷ்ணுசித்தரும் இங்கேதான் தவம் செய்தார்.

### த்ரிவிக்கிரமாவதாரம்

உலக மளந்தபொழுது மேல் நீட்டின திருவடியை நான்முகன் தன் கமண்டலு தீர்த்தத்தாலே சோதித்தான். அப்பொழுது கங்கை பிறந்தாள். வைகுண்டத்திலிருந்த நித்ய முக்தர்கள் விரஜா தீர்த்தங்கொண்டு திருவடி தொழுதபொழுது, சில துளிகள் இந்த நாராயணாத்ரியின் வடக்கே விழுந்து பெருகின. அதற்கு 'வைகுண்ட கங்கை' என்று பெயர் ஆயிற்று. இதன் கரையிலே பக்திஸாரர் என்கிற யோகீச்வரர் (திருமழிசைப் பிரான்) தவம் செய்து மோக்ஷத்தை அடைந்தார்.

இப்படி அஷ்ட தீர்த்தங்களையும் ஸப்த க்ஷேத்ரங்களையும் சொல்லி நாரத பகவான் வியாஸாதிகளுக்கு யாதவகிரி மாஹாத்மியத்தை விசதீகரித்து, இந்த திவ்ய தேசத்திலே கலிப்பிரவேசம் இல்லை என்றும் இந்த இடம்தான் தியானத்திற்கு ஏகாந்தமாய் இருக்கும் என்றும் சொல்லியதைக் கேட்டு, வியாஸாதிகள் எல்லோரும் அந்த யாதவாத்ரிக்கு அவசியம் சென்று நேராக அந்த மகிமைகளை அனுபவித்து, அந்த பகவானை ஸேவிக்க வேண்டு மென்ற த்வரையாலே, நாரதரையும் கூட்டிக் கொண்டு பிரயாணம் செய்தார்கள்.

வழியில் கங்கையில் ஓடத்தில் ஏறி வரும் பொழுது, பெரும் காற்றடித்து என்ன செய்தாலும் நடத்த முடியாத ஓடம் கடல் சேரும் வழியே சென்றது. அதைப் பார்த்த ரிஷிகள் எல்லோரும், "நாம் இனி யாதவாத்ரியைச் சேரும் வழியை அறியமாட்டோம்" என்று நிராசரானார்கள். அப்பொழுது பகவதாவேசாவதாரமான வ்யாஸர் ஓடத்தை நடத்துகிறவர்களைப் பார்த்து "உங்கள் கையிலிருக்கும் ஸாதனங்களைத் துறந்துவிடவேண்டும்" என்றும், ரிஷிகளைப் பார்த்து "நீங்கள் எல்லோரும் கண்ணைப் புதைத்து பகவானையே தியானம் செய்யுங்கள்" என்றும் நியமித்தார். அவர்களும் அப்படியே செய்யவே, ஓடம் ஸுகமாக அக்கரை சேர்ந்தது. ரிஷிகள் எல்லோரும் ஆச்சரியப்பட்டு, ஓடத்திலிருந்து கண்ணைத் திறந்து பார்த்து "என்ன ஆச்சரியம்?" என்னவே, வியாஸர், "பிரபன்னனுக்கு ஆகிஞ்சன்யமும் அனன்ய கதித்வமும் வேண்டும் என்பதற்கு இது வே த்ருஷ்டாந்தம்" என்று அறிவித்தார். "அவ

ஞல்தான் பேறு" என்கிறதும் "நம் கை முதல் ஒன்றுமில்லே" என்கிறதும் அறிய வேண்டும், என்று கருத்து.

அங்கிருந்து புறப்பட்டு அநேக தேசங்களே யும் ஆறுகளேயும், மலேகளேயும் காடுகளேயும் தாண்டி வந்து அங்கங்கு தர்மோபதேசம் செய்து கொண்டு தங்களுக்கு உத்தேசிய மான யாதவாத்ரிக்குச் சென்று அங்கிருக்கும் தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து பாபங்களேத் தொலேத்து, ஸ்ரீமத் ஆனந்தமய திவ்ய விமான மத்யஸ்தனை, ஸௌந்தர்ய, ஸௌகுமார்ய, ஸௌசீல்ய ஸௌலப்ய லாவண்யாதி குணங்களால் பரம போக்ய ஞை திருநாராயணனே ஸேவித்து, வாங் மனஸாகோசரமான ஆனந்தத்தால் பூர்ண ராஞர்கள். சிலர் சிந்தயந்தீபோல் பகவானே ஸேவித்த பொழுதே பாபங்களேத் தொலேத்து மோக்ஷத்தை அடைந்தார்கள். சிலர் சுபாச்ரயமான அந்த அர்ச்சாமூர்த்தியை மனத்தில் நினைத்து தம் தமது இடங்கள் சேர்ந்தார்கள். மற்ற சிலர் அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை விட்டுப் போகமாட்டாமல் அங்கேயே யாதவாத்ரியில் நித்யவாஸம் செய்து கொண்டிருந்தார்கள்.

இப்படி பராத்பரஞய் இருக்கிற திருநாராயணன் ஸர்வ ஸுலபஞயும், ஸர்வ ஸேவ்யஞயும், கேட்டவர்களுடைய இஷ்டார்த்தங்களே அனுக்ரஹித்துக் கொண்டு தன் மஹிமையை பக்தர்களிடத்தில் பிரகடனம் செய்து கொண்டு பரமானந்த பூர்ணஞய் பிரகாசித்துக் கொண்டிருக்கிருன்.

நாரதீய புராணுந்தர்கதமான யாதவகிரி மகாத்மியத்தின் சுருக்கம் முற்றிறறு.

# அனுபந்தம்

# உடையவர் செய்த ஜீர்ணேத்தாரம்

கலியுகத்தில் இரண்டு மூன்று ஆயிரம் ஸம்வத்ஸரங்கள் கழிந்த பின்பு பகவத்ஸங்கல்பத்தின்படி உண்டான ஏதோ ஒரு கோபத்தாலே இந்த யாதவாத்ரியிலிருந்தவர்கள் அழிந்துபோய், மிலேச்ச ராஜாக்கள் பிரபலமாய் இருந்த பொழுது யோகிகளான ரிஷிகள் எல்லோரும் இந்த பிரஜைகளின் துராசராஜ்ஞாஞதிகளேப் பார்த்து மிகவும் கவலேப்பட்டு, ஒருவர் கண்ணுக்கும் இலக்காகாமல் மானஸாராதனம் செய்துகொண்டே வந்தார்கள்.

அப்பொழுது இந்த ஆனந்தமய திவ்ய விமானமானது மரம், முள், புதர், புற்று இவைகளாலே மூடிப் போயிற்று. பகவாஞுடைய ஸங்கல்பத்தின்படி ஸ்ரீபெரும்பூதூரில் அவதாரம் செய்த உடையவர் சோள பாதையினுல் மேல்நாட்டுக்கு எழுந்தருளி தொண்டனூரில் இருந்த "பெட்டில தேவன்" என்கிற ஜைனர்கள் அரசனே ஞான உபதேசத்தாலும் பஞ்சஸம்ஸ்காராதிகளாலும் வைஷ்ணவஞக்கி "விஷ்ணுவர்த்தனன்" என்கிற பெயரிட்டு அங்கே எதிரிகளாய் வந்த ஜைனர்களே வாதத்தில் ஜயித்து விஜய த்வஜமெடுத்தார்.

அந்தத் தொண்டனூரிலிருக்கும் பொழுது, திருமண் காப்பு முடிந்து விட்டது. அப்பொழுது சிந்தித்துக் கொண்டிருக்கிற ஸமயத்திலே த்யானத்தில் திருநாரணன் வந்து, "என்னுடைய நியமனத்தின்படி பெரிய திருவடி ச்வேத த்வீபத்திலிருந்து திருமண் காப்பை இங்கே கொண்டு வந்து வைத்திருக்கிருன். அதை வாங்கி உபயோகபடுத்திக் கொள்ளும். இந்தக் கல்யாண தீர்த்தத்தின் கரையிலிருக்கிற என்னேயும் ஜீர்ணேத்தார

ணம் செய்யும்" என்றும் சொன்னார். இந்த விஷயத்தை அரசனுக்கும் சிஷ்யர்களுக்கும் தெரிவித்து விஸ்மிதராய், சிஷ்யர்களுடன் வடக்கே புறப்பட்டுப் போகமுடியாத காட்டிலே புகுந்து, அந்த யாதவாத்ரியைச் சேர்ந்து வேத புஷ்கரணி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பரிதான சிலா க்ஷேத்திரத்தில் த்ரிதண்டகாஷாய பரிக்ரஹம் பண்ணி திருநாரணரைத் தேடி வந்தார். எத்தனை தேடி வந்தாலும் இருக்குமிடம் அகப்படவில்லை. பிறகு த்யானஸக்தராய் இருந்தபொழுது, "என்ன யோசனை? இந்த திருத்துழாய் செடிகளின் வழியிலே இன்னும் வடக்கே கல்யாண தீர்த்தத்தின் நைருத்யத்தில் (தென்மேற்கு) பெரும் புற்று கிடக்கும். அதன்மேல் பெரிய திருத்துழாய் செடி இருக்கும். அதுக்குள்ளே நான் இருப்பேன். கல்யாண தீர்த்தத்தின் மேற்கே திருமண் காப்பு அகப்படும். எழுந்திரும்" என்று சொன்னாற்போல் ஆயிற்று.

அதே வழியில் வந்து கல்யாண தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, தார்க்ஷ்ய க்ஷேத்ரத்தில் இருக்கும் திருமண்காப்பை எடுத்து சாத்திக் கொண்டு முன் கூறினபடி பெரும் புற்றையும் அதன் மேல் திருத்துழாய் புதுமையும் பார்த்து ஆனந்தித்தவராய் புற்றைத் சோதித்து, அதற்குள் ஆனந்தமய திவ்ய விமானத்தையும் அதன் நடுவிலே கர்பக்ருஹத்தில்திருநாரணனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தையும் ஸேவித்து ஆனந்த மென்கிற பெரிய பாற்கடலில் மூழ்கி தம்மைப் போல் திருநாரணனையும் பால்குடங்களாலே அபிஷேகம் செய்தார்.

பின்னையும் அவரை ஸேவித்து ஆனந்த பரவசராய் நம்மாழ்வருடைய கருத்தை அறிந்து "ஒரு நாயகம்" என்கிற திருவாய் மொழியை திருநாரணற்கே தகுதியாய் இருக்கிற தென்று ஸமர்ப்பித்தார். இப்படி தாம் தம் திருக் கையாலே மூன்று நாள் ஆராதித்து நித்யாராதனத்துக்காக ஸ்ரீரங்கத்திலிருந்து நன்றாக ஸ்ரீ பாஞ்சராத்ரத்தை அறிந்த ஸ்ரீரங்கராஜ பட்டர் என்கிற அர்ச்சகரை வரவழைத்து ஸாத்வத ஸம்ஹிதா ப்ரகாரமாக ஸம்ப்ரோக்ஷணாதிகளைச் செய்வித்து, நித்யாராதனம் செய்து கொண்டிருந்தார்.

"இவருக்குத் தகுதியாயிருக்கிற உத்ஸவ மூர்த்தி எங்கே இருப்பார்" என்று சிந்திக்கும் ஸமயத்தில், "டில்லீசனிடனிடத்தில் நம் உத்ஸவமூர்த்தி இருக்கிறார். அங்கே சென்று அழைத்து வாரும்" என்று திருநாராணன் நியமிக்க, உடையவர் டில்லிக்குப் போய் அரசனைப் பார்த்துத் தன் கருத்தைச் சொல்லவே, அவன் ஆணையின்மேல் தாமே போய் விக்ரஹங்களுடை ஸமூஹத்தில் தேடினாலும் 'ராமப்ரியன்' என்கிற அந்த உத்ஸவ பிம்பம் அகப்படவில்லை. மறுபடியும் யோசிக்கிற பொழுது அந்த ராமப்ரியன் வந்து "அரசனுடைய அந்தப் புரத்தில் இருப்பேன். அரசன் மகளுடன் போகத்திலிருப்பேன். என்னைக் கூப்பிட்டுக் கொள்ளும்" என்று சொன்னார்.

அனந்தரம் உடையவர் அரசனிடம் போய் "என் பெருமாள் உன் அந்தப்புரத்தில் இருப்பார்" என்று கூறினார். உடனே அரசன் இவரை உள்ளே அழைத்துச் சென்று "உம் பகவான் இங்கே இருந்தால் கூப்பிட்டு அழைத்துக் கொள்ளும்" என்றான். உடையவர் "என் ராமப்ரியனே வா" என்று அழைக்கவே, ராமப்ரியன் இரண்டு மூன்று வயதுள்ள குழந்தை போல் ஸர்வாபரணங்களாலும் அலங்க்ருதனாய் காலில் சதங்கைகளை ஓசை செய்து கொண்டு வந்து "என் தந்தையே" என்று சொல்லி துடையின் மேலே உட்கார்ந்தார்.

அப்பொழுது உடையவர் "என் செல்வப் பிள்ளையே" (ஸம்பத்குமாரா) என்று சொல்லி அணைந்து ஆனந்தக் கடலில் மூழ்கினார். இதைப் பார்த்த அரசன் ஆச்சரியத்துடன் சத்ரம் சாமரம், வஸ்திராபரணங்கள் முதலான ஸமஸ்தோபசாரங்களையும் செல்வப்பிள்ளைக்கு சமர்ப்பித்து, உபசரித்து பல்லக்கில்

எழுந்தருளப் பண்ணி, உடையவரையும் மிக வும் மரியாதையுடன் ஆதரிந்து அவருடன் எல்லா விருதுகளை அனுப்பிக் கொடுத்தான். அந்த அரசனின் மகள் செல்வப்பிள்ளையை விட்டிருக்கமாட்டாமல் தானும் புறப்பட்டாள். இப்படி உடையவர் யதிராஜ ஸம்பத் குமா ரனை மிகுந்த வைபவத்துடன் எழுந்தருளப் பண்ணிக் கொண்டுவந்து, நித்யோத்ஸவ, பக்ஷோத்ஸவ,மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத் ஸவாதிகளையும், பிரம்மோத்ஸ வாதிகளையும் நடத்திக்கொண்டு வந்து "யதிராஜமடம்" என்கிற மடத்தை ஸ்தாபித்து அங்கே தாமும் இருந்து, ஸ்ரீபாஷ்யாதிகளைக் காலக்ஷேபம் சொல்லிக்கொண்டு, திருநாரணன், செல்வப் பிள்ளை இவர்களோடு சர்வவித கைங்கர்யங்க ளையும் ஸர்வகாலங்களிலேயும் நடத்திக் கொண்டு, தன்னுடைய அழகியமணவாள னுடைய பிரிவையும் மறந்து, பன்னிரண்டு ஸம்வத்ஸரம் இந்த யாதவகிரியில் எழுந்தரு ளியிருந்தார்.

உடையவர் ஒரு நாள் கல்யாண தீர்த்தத் தில் ஸ்நானம் செய்வதற்காகச் சென்ற பொழுது, ஸ்ரீரங்கத்திலிருந்து வந்த "மாருதி ச்சிறிய ஆண்டன்"என்கிறவர் தண்டனிட்டு, "தேவரீர் திருவரங்கத்திலிருந்து இந்த பக்கம் எழுந்தருளின பிறகு, கூரத்தாழ்வானுக்கும் பெரியநம்பிக்கும் கண்ணை வாங்கின பாவி யான, அந்த சோழராஜன் கழுத்தில் புண் ணுலே புழுத்து மாண்டான்" என்று விண்ண ப்பம் செய்தார். இதைக் கேட்டவுடனேயே, "இந்த வராஹநாயனார் திருமேனி வியர்வை யான தீர்த்தத்திற்கு இதுவரையிலும் கல்யா ணம் என்ற பெயர் ரூடமாயிருந்தது. இப் பொழுது லௌகிகமும் ஆயிற்று. இந்த நல்ல செய்தி செவிப்பட்டது. ஆகையாலே இது கல்யாண தீர்த்தம்" என்று சொல்லி ஸ்நானம் செய்து, மலையில் யோகநரஸிம்ம னைச் சேவித்து, "ஸ்வாமின் ! உம்முடைய யோகப்பியாஸத்தை விட்டு கேட்கவேண்டும். அடியேன் ஸாலக்ராமத்தில் உம்மிடம் சோழ ராஜன் விஷயமாக பிரார்த்தித்திருந்தேன். பரமதயாளுவாயும்,தீனபந்துவாயும்இருக்கிற நீர் இப்பொழுது அதை ஸபலமாக்கினீர்" என்று விண்ணப்பம் செய்தார்.

பிற்பாடு உடையவர் அந்த ஆனந்த மய திவ்ய விமானத்தைச் சுற்றி அழகான கோயில் கட்டிடம் கட்டிவைத்தார். அனந் தரம் குடை, சாமரம், விசிறி, வெற்றிலை பாக்குப் பெட்டி, காளாஞ்சி, கண்ணாடி, கரகம் முதலான ஸகலவித கைங்கர்யங்களுக்கும் ஆழ்வார் திருநகரி முதலான இடங்களிலி ருந்து சோழியரை அழைப்பித்து, ஸ்ரீரங்கத் திலிருந்தே திருநாரணப் பெருமாள் அரைய ரையும் விண்ணப்பம் செய்வதற்காகவும், பல்லாண்டு பாடுவதற்காகவும், அழைத்து கைங்கர்யங்களை நடப்பித்துக்கொண்டு இருந் தார். அவர்களுக்கு "ஐம்பத்திருவர்" என்று பெயர் கொடுத்தருளினார்.

அவர்களை ஸாம்யங்கள் என்று நான்காகப் பிரித்து, க்ரமமாக திருவனந்தபுரதாஸர், மாலாகாரதாஸர், திருக்குருங்குடிதாஸர், யதி ராஜதாஸர் என்ற தாஸ்யநாமங்களைக் கொ டுத்து, அவர்களுக்கு விருது முதலானவை களைக் கொடுத்து ஞானோபதேசம் செய்து, "செல்வப்பிள்ளையை நீங்கள் கிணற்றின் கரையிலிருக்கும் குழந்தையைப் பார்த்துக் கொள்வது போல பயபக்தியோடு ஜாக்கிர தையாகப் பார்த்துக்கொண்டு, எப்பொழுதும் மங்களாஸாஸனம் செய்து கொண்டிருக்க வேண்டும்" என்று சொல்லித் தன் வஸ்து வைப் பிறர் கையில் ஒப்புவிக்க வைப்பது போல் இவர்களிடம் செல்வப்பிள்ளையைக் கொடுத்தார். உடையவர் திருநாரணர்க்கும் செல்வப்பிள்ளைக்கும் யாதொரு குறைகளும் இல்லாதபடி ஏற்பாடு செய்தார்.

பிற்பாடு தமக்கும் ஸ்ரீரங்கநாதனுக்கும் சர ணாகதிகத்யரூபமான ஸம்வாதம் நடந்தபொ ழுது "யாவத் ச்ரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ"— (சரீரம் இருக்குமளவும் ஸ்ரீரங்கத்திலேயே இரு) என்று அழகிய மண வாளன் நியமித்ததை நினைத்து, "சோழன் முடிந்தான். இங்கே அவச்யம் செய்ய வேண்டுபவை எல்லாம் செய்தாயிற்று

இன்று கோயிலுக்குப் போகவேண்டும்," என்று உத்தேசித்து திருநாரணனை நியமனம் கேட்டார். திருநாரணன் இஷ்டமில்லாமல் நிருத்தரனாய் இருந்தான். இவரும் புத்ரவாத்ஸல்யத்தாலே செல்வப்பிள்ளையை விட்டிருக்கமாட்டாமல் போகமுடியாமல் இருந்தார். ஐம்பத்திருவர்களும் உடையவர் திருவடிகளைப் பிடித்து, "தேவரீர் எங்களுக்குப் பெருமாள். தேவரீருக்கு செல்வப்பிள்ளை பெருமாள். எங்கள் பெருமாளைப் பார்த்துக் கொள்வது எங்களுக்குக் கடமை. உம்முடைய பெருமாளை தேவரீர்தான் பார்த்துக்கொள்ள வேண்டும். நீர் எங்கே போனாலும் நாங்களும் அங்கேயே வருவோம்" என்று விண்ணப்பித்தார்கள். இந்த மூன்றுவிதம் தடங்கல்களாலே, "அந்தப் பக்கம் ஸ்ரீரங்கநாதன் நியமனம், இந்த பக்கம் திருநாரணர் நியமனம், எனக்கும் விட்டுப் போக முடியாது. ஐம்பத்திருவரும் என்னை விட்டிருக்கமாட்டார்கள். எல்லோரும் இங்கே இருந்து கிளம்பினால் இவ்வளவு செய்தும் சிறிதும் பிரயோஜனமில்லாமல் போய்விடும்" என்று உடையவர் யோசித்து ஒன்றும் சரிதோன்றாமல் "இரண்டு இடத்திலேயும் நாம் இருந்தே இருக்கவேண்டும்" என்று நிச்சயித்து, நல்ல மேதாவியான சிற்பியை வரவழைத்துத் தம்முடைய திருமேனியைப் போல ஒரு குறையில்லாமல் ஒரு விக்ரஹத்தைச் செய்வித்து அந்த விக்ரஹத்திற்கு ஸ்ரீ பாஞ்சராத்ர சாஸ்திரத்தில் சொல்லுகிற பக்தவிக்ரஹ ப்ரதிஷ்டாகிரமத்திலே பிரதிஷ்டையைச் செய்வித்து, பிராணபிரதிஷ்டை செய்யும்பொழுது தம்முடைய யோக சக்தியின் மகிமையினால் தாமே அந்த விக்ரஹத்தில் ஸாந்நித்யம் செய்து, ஐம்பத்திருவர்களுக்கு விச்வாஸம் பிறக்கிறதற்காக தாம் அப்பாலே நின்று திறைக்குள் இருக்கிற விக்கிரகத்தால் பேச "இங்கே இன்று நாம் விபவாவதாரம் போலவே இருக்கிறோம்; தெரிந்ததா? நீங்கள் உங்களுடைய கைங்கர்யங்களில் சிரத்தையுடனிருங்கள்" என்று நியமித்து திருநாரணன் தான், ஐம்பத்திருவர், நம்போல்வர், எல்லோருக்கும் சந்தோஷமாம்படிக்கு இங்கேயே நித்யவாஸம் செய்து கொண்டிருந்தார்.

இப்பொழுதும் இன்றைக்கும் நித்யமாக திருநாரணற்கும் செல்வப்பிள்ளைக்கும் ஸர்வ விதமான கைங்கர்யங்களைத் தாமே செய்து கொண்டு த்ருடமான மஹாவிச்வாஸம் இருக்குமவர்களுக்கு தம்முடைய விசித்திர சக்தியைக் காண்பித்துக்கொண்டு கலி புருஷனாலே தோஷம் ஏற்பட்டாலும் அதைப் போக்கிக்கொண்டு சேதனர்க்காக திருநாரணனிடத்தில் தாம் புருஷகாரித்து பிரபத்தியையும் செய்துகொண்டு எழுந்தருளி யிருக்கிறார்.

இது எப்படித் தெரியுமென்றால், பகவதனுபவத்தாலே பரமானந்த பூர்ணதையையும், அந்த ஆனந்த பரிவாஹரூபமான புன்சிரிப்பையும், திருணீக்ருத ஜகத்த்ரயராய் இருக்கும் காம்பீர்யத்தையும், லோகமெல்லாம் உஜ்ஜீவிக்க வேண்டும் என்று க்ருபாமாத்ர பிரஸன்னாசார்யராய்இருக்கும்அந்தமுகப்ரஸாதத்தையும் தேஜஸ்ஸையும், ஸௌலப்யங்களையும் ப்ரத்யக்ஷமாக இந்த மாமிஸக்ஷுஸ்ஸுக்கே தெரிவிக்கும்அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவித்தால் அவருடைய ஸமஸ்தகல்யாண குணங்களும், விபவாவதார ஸாம்யங்களும் நிதர்சனமாகும். இப்படியிருந்து இப்பொழுதும் திருநாரணன் ஸேவைகளும் இன்றைக்கும் நடத்திக்கொண்டு வருகிறார் நம்முடைய உடையவர்.

அச்சிட்டோர்: கமர்ஷியல் பிரிண்டிங் அன் பப்ளிஷிங் அவுஸ், 46, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1.



திருநாராயணபுரம் கல்யாண தீர்த்தமும், ஸ்ரீ நரஸிம்மஸ்வாமி கோவிலும்.


# பக்தன்.

பக்தியையும் நல்லொழுக்கத்தையும் வளர்க்கும் நோக்கத்துடன்
நடத்தப்படும் மாதப் பத்திரிகை.

ஆசிரியரும், உரிமையாளரும் :

ஸ்ரீ எம் ஓ. அழகிய சிங்கராச்சாரி, பி. எஸ் ஸி., பி. எல்.

வருடச் சந்தா ரூ. 5. நன்கொடை சந்தா ரூ. 10. ஆயுள் சந்தா ரூ. 100.

காரியாலயம் :

97, வெங்கடரங்கம் பிள்ளை தெருவு, திருவல்லிக்கேணி, சென்னை-5. (போன் : 86109)



திருநாராயணபுரம் ஸ்ரீ ராமாநுஜர்.

WRAPPER PRINTED AT JAGANMOHINI PRESS MADRAS-5